# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழி வளம்

வயல் : 2 விளைச்சல் : 1 | திருவள்ளுவர் ஆண்டு 2052 | ஏப்பிரல் திங்கள் - 2021



தேர்தல்கலைச்சொற்கள்!

இல்லந்தோறும் இனியதமிழ்!

தேரையரின் பிணியணுகாவிதி!

மலைவகை!

திறவுகோல்!

# தேர்தல் கலைச்சொற்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. General election | – | பொதுத் தேர்தல் | 13. Election result | – | தேர்தல் முடிவு |
| 2. Election campaign | – | தேர்தல் பரப்புரை | 14. Allied parties | – | கூட்டணிக் கட்சி |
| 3. By-election | – | இடைத்தேர்தல் | 15. Vote | – | ஒப்போலை |
| 4. Election day | – | தேர்தல் நாள் | 16. Voters list | – | நேரியர் பட்டியல் |
| 5. Re-election | – | மறுதேர்தல் | 17. Voter | – | நேரியர் |
| 6. Poll | – | கருத்துக்கணிப்பு | 18. Election | – | தேர்தல் |
| 7. Contesting candidate | – | போட்டியிடும் வேட்பாளர் | 19. Election tribunal | – | தேர்தல் தீர்ப்பாயம் |
| 8. Nota | – | எதுவுமில்லை | 20. Elector | – | தேர்ந்தெடுப்பவர் |
| 9. Election manifesto | – | தேர்தல் அறிக்கை | 21. Electoral laws | – | தேர்தல் சட்டங்கள் |
| 10. Lobbyist | – | பரப்புரையாளர் | 22. Electoral right | – | தேர்தல் உரிமை |
| 11. Contestant | – | வேட்பாளர் | 23. Ballot paper | – | ஒப்போலைச்சீட்டு |
| 12. Constituency | – | தொகுதி | 24. Ballot box | – | ஒப்போலைப்பெட்டி |
| | | | 25. Ballot Machine | – | ஒப்போலைப் பதிவுப்பொறி |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2052 - பங்குனி
ஏப்பிரல் 2021

ஆசிரியர் : தங்க. காமராசு
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com


உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன



# ஆசிரியர் பேசுகிறார்

## தமிழுக்கு உரமிடுவோம்!

அன்பானவர்களே வணக்கம்!.

கடந்த நிதியாண்டு (2020–2021) முழுவதும் பரபரப்பாக இயங்கி, பல்வேறு தமிழ் பாதுகாப்புத் திட்டங்களைச் செயற்படுத்தினோம். நிதியாண்டின் நிறைவில் தூயதமிழ்ப் பற்றாளர் விருது, தூயதமிழ் ஊடக விருது, நற்றமிழ்ப் பாவலர் விருது, சொல்லின்தாய் விருது ஆகியவற்றிற்கான அரசாணைகள் வெளிவந்தன. மார்ச்சு மாத இறுதிக்குள் விருதாளர்களைத் தேர்வு செய்யும் கடுமையான பணியில் இயக்ககக்குழு இறங்கியது.

செய்தி வெளியீடு, விண்ணப்பங்களைப் பெற்று நிரல்படுத்தல், தேர்வுக்குழு அமைத்தல், தேர்வுக் குழுவின் முடிவை அரசுக்கு அனுப்பி ஒப்புதலும் அரசாணையும் பெறுதல் எனத் தொடர் நடவடிக்கையால் ஒருவழியாக விருதாளர்கள் தேர்வு முடிந்தது. இவ்வியக்ககம் விருதாளர்களைத் தேர்வுசெய்யும் முறை புதுமையாகவும், முன்மாதிரியாகவும், நேர்மையாகவும் இருப்பதாகப் புறநிலை அறிஞர்களும், தலைமைச் செயலகத்திலிருந்து அழைக்கப்பட்டிருந்த தேர்வுக்குழுவினரும் பாராட்டினர்.

தேர்வு நெறிமுறைகளை வகுத்து, அதற்கு அரசின் ஒப்புதல் பெற்று, அதன்பிறகு அந்நெறிமுறைகளிலிருந்து இம்மி அளவிற்குக்கூட விலகாமல், நேர்மையாகத் தேர்வு நடைபெற்றது. போட்டியாளர்களின் முகத்தையோ பின்னணியையோ அடையாளமாகக் கொள்ளாமல், அவர்களின் செயற்பாடுகளையே அளவுகோலாகக் கொண்டு மதிப்பெண் அடிப்படையிலேயே தேர்வு நடைபெற்றது. அதனால் விருது என்பது ஊரறிந்த அறிஞர்களுக்குத்தான் கிடைக்கும் என்ற தவறான புரிதலிலிருந்து தெளிவு கிடைப்பதுபோல் இதுவரை யாருக்கும் அறிமுகமில்லாமல், தமிழை நேசித்துவரும் பலரை விருதுக்குத் தேர்வுசெய்யும் வாய்ப்புக் கிட்டியது.

இந்தத் தேர்வு முடிவுகள் செய்தித்தாள்களில் வெளிவரும்போது பலர் வியப்புடன்கூடிய மகிழ்ச்சியில் திளைப்பார்கள் என்பது உண்மை. குறிப்பாக, இந்தத் தலைமுறை இளைஞர்கள் தமிழ்மொழியின் மீது கொண்டுள்ள பற்றும் ஈடுபாடும் எத்தகைய ஆழம்கொண்டது என்பதனை உலகறியச் செய்யும் ஒரு செய்தியாக விருதாளர்கள் அறிவிப்பு இருக்கும்.

மெத்தப் படித்தவர்கள், பட்டம் பெற்றவர்கள் மட்டுமே புலமை மிக்கவர்களாக இருப்பார்கள் என்ற எண்ணத்தை மாற்றும் அளவிற்கு அதிகம் கற்காத பாட்டாளிமக்களில் பலர் தமிழ்ப்புலமைமிக்கவர்களாக வாழ்வதுடன், தங்களை அடையாளப்படுத்திக் கொள்ளாமல் தமிழ்ப்பணியாற்றிவருகிறார்கள் என்ற உண்மையும் இந்த விருதாளர்கள் தேர்வின் வாயிலாகத் தெரியும்.

தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாத பலரும் தமிழ்மொழியை நேசித்து, கற்று, மொழியில் தேர்ந்தவர்களாக இருக்கிறார்கள் என்பதும் வியப்பானதாகத் தெரியவரும். தமிழ் வளர்ச்சியிலும் பாதுகாப்பிலும் மகளிருக்குப் பெரும்பங்கு இருப்பதைத் தெள்ளத்தெளிவாக எங்களால் உணரமுடிகிறது. குறிப்பாக, சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டத்தில் மாணவர்கள் ஈடுபாட்டுடன் கலந்துகொண்டது எங்களை வியப்பில் ஆழ்த்தியது.

சொல்லின் தாய் விருதுக்காகக் கல்லூரிக் கல்வியின் மண்டில இயக்குநர்கள் அனுப்பிய பட்டியலில் மாணவிகளின் பெயர்கள் அதிகம் இடம்பெற்றிருந்தன. எனவே, இந்த விருதாளர்கள் தேர்வு நடவடிக்கையை ஓர் அலுவலகப் பணியாகவோ, சடங்காகவோ, கடமையாகவோ கருதாமல், தமிழ்மொழியின் எதிர்காலத்தைக் கணிக்கும் ஓர் அளவுகோலாகக் கருதி அதிலும் வெற்றிபெற்றோம். தமிழ்மொழி தன் வளர்ச்சியில் ஏறுமுகத்தில்தான் இருக்கிறது என்ற உண்மையை அறிந்தோம்.

தமிழ்மொழியை வளர்ப்பதைக் காட்டிலும் பாதுகாக்கும் தலையாயப் பணியில் ஈடுபட்டுவரும் அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர்கள், பதிப்பாசிரியர்கள் மற்றும் புறநிலை அறிஞர்களின் பணிகளை நாம் பாராட்டியாக வேண்டும். மீண்டும் புது எழுச்சியோடும் மலர்ச்சியோடும் உங்களைச் சந்திக்கிறேன்.

மீண்டும் சந்திப்போம்...

# அறிய வேண்டிய அரிய செய்தி - 11

## அகம் உணர்த்தும் ஆறிரு திங்கள்

தமிழ் இலக்கியங்கள் கழக இலக்கியம், அற (நீதி) இலக்கியம், பத்தி இலக்கியம், காப்பிய இலக்கியம், சிற்றிலக்கியம் என்ற வகையில் பிரிக்கப்பட்டுள்ளன. இவ்வகைக்குள் அடங்காத பிற்காலப் புலவர்களின் பாடல்கள் 'தனிப்பாடல் திரட்டாகத்' தொகுக்கப்பட்டுள்ளன. அவற்றுள், தமிழ்ப் புலவரின் சொல்லாளுமைத் திறனையும், தமிழின் சொல்நயத்தையும் சுட்டும் தனிப்பாடலொன்றின் விளக்கத்தை இனிக் காணலாம்.

எட்டுத் தொகை 'நூல்களை' எளிதாக மனனம் செய்து கொள்ள உதவியாக

"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்
கற்றறிந்தார் ஏத்தும் கலியொடு அகம்புறம் என்று
இத்திறத்த எட்டுத் தொகை"
என்ற செய்யுள் உள்ளது போல்,

தமிழில் வழங்கப்பெறும் பன்னிரண்டு மாதப் பெயர்களையும் மனனம் செய்து கொள்ள உதவும் வகையில் எண்சீர் ஆசிரிய விருத்தத்தில் பின்வரும் பாடலை அமைத்துள்ளார், திருவாரூர் சொக்கலிங்க கவிராயர்.

"மாதஞ் **சித்திரை** கடலைவை தனள்நீயன்பு
**வைகாசி**னஞ் சிறியாளை **ஆனி**பெருக்கும்
போதம்பன் போர**ாடி**னானை **யாவணி**யாய்ப்
**புரட்டாதி**ன்கலம் வெறுத்தா **ளைப்பசி**யில்லென்றே
சாதனை செய்தே சினந்தாள் **கார்த்திகை**க்கும் கொடைவேந்
தாசகி**மார்கழி**யார் கோ**தை**யு **மாசி**லாமல்
காதலுடன் சேர்வணல்லதிட்ட முன்**பங்குனி**ப்பார்
காந்தன்எனும் கலியாண சுந்தர மாமுகிலே!

இச்செய்யுளை மேம்பட நோக்கினால் தமிழில் வழங்கும் பன்னிரு மாதப் பெயர்கள் அமையப் பாடியது போல் தோன்றினாலும், சீர்பிரித்துப் பார்க்கும்போது தலைவியின் அகவுணர்வை அழகுபடப் பொதிந்திருப்பதை அறியலாம்.

**செய்யுளின் பொருள்:**

முருகன் என்று சொல்லத் தக்க பெரிய முகில் (மேகம்) போன்ற கலியாண சுந்தர வள்ளலே!

**மாது அஞ்சித் திரைக்** கடலை வைதனள் – காதலி ஆனவள் பயப்பட்டு காமன் முரசு (மன்மதன்) கடலைப் பழித்தாள். சினம் சிறியாள் – மிகவும் இளமையானவள், ஆனி பெருக்கும் – துன்பத்தை மிகச் செய்கின்ற, போது அம்பன் போர் **ஆடி**னான் – மலர்க் கணையுடைய காமன் (மன்மதன்) சண்டையிட்டான், **பணியா புரட்டா** – பாம்பு போலப் புரண்டு, **தி**ன்கலம் வெறுத்தாள் – உண்கின்ற கலத்தை வெறுத்துத் தள்ளினால், **ஐப்பசி**யில்லென்றே சாதனை செய்தே சினந்தாள் – நல்ல பசியில்லையென்று ஒட்டாரமாகச் (பிடிவாதமாகச்) சினந்து (கோபித்துக்) கொண்டாள். **கார்த்திகை**க்கும் கொடை வேந்தா – முகில் திகிலடையும்படியான அரசனே! நீ அன்பு **வைகா** – நீ அவளிடம் அன்பு வைத்து அவளைக் காப்பாற்று, சகி**மார் கழி**யார் – தோழிமார் உன்னைக் கழித்து விடமாட்டார்கள், கோ**தை**யும் **மாசி**லாமல் காதலுடன் சேருவாள் – பெண்ணும் குற்றமில்லாமல் விருப்பதோடு கூடுவாள், நல்ல திட்டம் உன் **பங்கு** – இன்பமே உண்டு, உ**னி**ப்பார் – எண்ணிப்பார்ப்பாயாக.

இவ்வாறு தமிழில் வழங்கப்பெறும் பன்னிரண்டு மாதப் பெயர்களும் ஒரே செய்யுளில் வரிசை முறையில் அமைந்திருப்பது சிறப்பு. மேலும் சீர்பிரித்துப் பொருளை நோக்கும் போது, தலைவியின் அக உணர்வுகளைச் சுட்டுவது தனிச் சிறப்பாகும்.

ஒரே செய்யுளை மேலோட்டமாகப் பார்க்கும் போது ஒரு பொருள்படுமாறும், சீர் பிரித்துப் படிக்கும்போது வேறொரு பொருள்படுமாறு அமைத்துள்ள புலவரின் சொல்லாளுமையையும், தமிழ்மொழியின் சொல்நயத்தையம் இப்பாடலின்வழி அறியமுடிகிறது. தமிழிலக்கியப் பரப்பில் இன்னும் இதுபோன்ற எண்ணற்ற சொற்சுவைக் கருவூலங்கள் நிரம்ப உள்ளன. அவற்றைக் கண்டறிந்து கற்றுச் சுவைத்து இளைய தலைமுறையினருக்கும் எடுத்துச் சொல்லி இன்புறுவோம்.

சித்திரை தொடங்கி பங்குனி வரையிலான மாதங்களின் தூய தமிழ்ப் பெயர்கள்:–

| வ. எண் | மாதம் | தமிழ்ப்பெயர் |
|---|---|---|
| 1 | சித்திரை | மேழம் |
| 2 | வைகாசி | விடை |
| 3 | ஆனி | ஆடவை |
| 4 | ஆடி | கடகம் |
| 5 | ஆவணி | மடங்கல் |
| 6 | புரட்டாசி | கன்னி |
| 7 | ஐப்பசி | துலை |
| 8 | கார்த்திகை | நளி |
| 9 | மார்கழி | சிலை |
| 10 | தை | சுறவம் |
| 11 | மாசி | கும்பம் |
| 12 | பங்குனி | மீனம் |

**ஏ.காந்தி**
உதவிப்பதிப்பாசிரியர், அகரமுதலி இயக்ககம்

# இல்லந்தோறும் இனிய தமிழில் பேசுவோம்!

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் கோவை இன்தமிழ் இல்லத்தரசிகள் சங்கம் இணைந்து நடத்திய "இல்லந்தோறும் இனிய தமிழில் பேசுவோம்" என்ற தலைப்பிலான இணையவழிக் கருத்தரங்கம் 20.03.2021 ஆம் நாள் நடைபெற்றது.

இக்கருத்தரங்கில் கோயம்புத்தூர் இல்லத்தரசிகள் சங்கத்தின் ஒருங்கிணைப்பாளர் முனைவர் அ.ஷர்மிளாபானு அவர்கள் வரவேற்புரை வழங்கினார். கருத்தரங்கில் தொடக்கவுரையாற்றிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தொகுப்பாளர் திருமதி ஜெ.சாந்தி அவர்கள், இயக்ககத்தின் செயற்பாடுகள் குறித்து விளக்கமளித்ததோடு, "இல்லந்தோறும் இனிய தமிழில் பேசுவோம்" திட்டமானது மாவட்டந்தோறும் தொடங்கப்பெற்று, தூயதமிழ் குறித்த விழிப்புணர்வுக் கருத்தரங்குகள் உள்ளிட்ட நிகழ்ச்சிகள் நடத்தப்பெறும் என்றும், அவற்றில் பங்குபெறும் இல்லத்தரசிகள் அனைவருக்கும் தூயதமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துவதன் தேவை, அதனால் அடுத்த தலைமுறையினருக்கு விளையும் பயன்கள் ஆகியவை குறித்த விழிப்புணர்வுகள் ஏற்படுத்தப்படும் என்றும் தெரிவித்தார்.

இக்கருத்தரங்கில் வாழ்த்துரை வழங்கிய வேலூர் செம்மொழிச் சங்கத்தின் செயலாளர் முனைவர் பெ.தமிழ்ச்செல்வி அவர்கள், பழைய திரைப்படப் பாடல்களில் இடம்பெற்றுள்ள தூயதமிழ்ச் சொற்களைச் சுட்டிக்காட்டி, நல்லிணக்கச் சிந்தனை, உறவுமுறைப் பேணல், உணர்வுப் பகிர்வுமுறை ஆகியவற்றைத் தமிழ்ச் சொற்களால் விளக்கும் வகையில் அக்காலத் திரைப்படப் பாடல்கள் விளங்கின என்று கூறினார். கோவை இல்லத்தரசிகள் சங்கத்தைச் சேர்ந்த திருமதி தெ.சுதா அவர்கள், மக்கள் வேறுபாடின்றி ஒருமித்த உணர்வுடன் வாழ குறுந்தொகை, புறநானூறு போன்ற சங்க இலக்கியப் படைப்புகள் பெருந்துணையாக அமைந்தன என்று கூறினார்.

இணையவழியில் நடைபெற்ற இக்கருத்தரங்கில் அயல்நாடுகளிலிருந்தும் தமிழன்பர்கள் பலர் பங்கேற்றனர். இக்கருத்தரங்கில் தொழில்நுட்பத் துறையைச் சேர்ந்த மாணவிகள், திருநெல்வேலி பொதிகைத் தமிழ்ச்சங்கத்தினர் உள்ளிட்டோர் பங்கேற்றுச் சிறப்பித்தனர். சென்னை மொழியியல் பயிற்றுநர் முனைவர் அ.இந்திரா பிரியதர்ஷினி அவர்கள் கருத்தரங்க நிகழ்வுகளை நெறிப்படுத்தி வழங்கினார்.

## மலைவகை

அறை = சிறுபாறை

முரம்பு = சரட்பாங்கான மேட்டுநிலம்

கரடு = கற்பாங்கான பெருந்திடல்

பொற்றை , பொறை , பொச்சை = பெரும்பாறை

பறம்பு = சிறுகுன்று

குன்று, குன்றம், கோடு = சிறுமலை

குறும்பு = அரணான சிறுமலை

மலை = மரமடர்ந்து வளமான குன்றுக்கூட்டம்

பொருப்பு = பக்கமலை

அடுக்கம் = மலையடுக்கு

விலங்கல் = நாட்டின் குறுக்காகவுள்ள மலை

விண்டு = விண்ணளாவிய மலை

ஓங்கல் = உயர்ந்த மலை

சிலம்பு = எதிரொலிக்கும் மலை

வரை = மூங்கில் வளரும் மலை

குவடு, கோடு = மலைச்சிகரம்

முடி = உச்சிச்சிகரம்

கொடுமுடி = உச்சிச் சிகரவுச்சி

கவான் = இரு குவடுகள் சேருமிடம்

வெற்பு = அடிமலை

சாரல் = மலையடிவாரம்

நன்றி: சி.பூ.மணி
உலகத் தமிழ்க் கழகம்
பெங்களூரு.

# தேரையர் கூறும் பிணியணுகாவிதி

**சி**த்த மருத்துவத்தில் நோய்க்காப்பு என்பது மிகவும் முக்கியமானதும் சிறப்பானதுமாகும். நல்வாழ்வுக்கு நோய்க்காப்பு மிகவும் இன்றியமையாதது. வேறெந்த மருத்துவத்திலும் சொல்லப்படாத விடயங்களைத் தேரையர் என்னும் மாபெரும் சித்தர் பிணியணுகாவிதி பற்றி தெளிவாகச் சித்த மருத்துவத்தில் கூறியுள்ளார்.




**மரு.ச.சிவகுமார்**
இணைப்பேராசிரியர்
குணபாடம் துறை,
தேசிய சித்த மருத்துவ நிறுவனம்,
தாம்பரம் சானடோரியம் , சென்னை – 600047


"திண்ண மிரண்டுள்ளே சிக்க வடக்காமற்

பெண்ணின்பா லொன்றைப் பெருக்காமல் –
உண்ணுங்கால் நீர்சுருக்கி

மோர்பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர்தம்

பேருரைக்கிற் போமே பிணி"

**திண்ண மிரண்டுள்ளே சிக்க அடக்காமல் :**

உடம்பிலுள்ள கழிவுகளை முறையாக வெளியேற்ற வேண்டும். "மும்மலம் அறுநீர்" என்பதற்கிணங்க நாள்தோறும் முறையாக மல–சலங்களைக் கழிக்க வேண்டும். மலத்தையும் சலத்தையும் (சிறுநீர்) உடலினுள்ளே சிக்கவிட்டால் நாளடைவில் அதுவே நோயுண்டாகக் காரணமாக அமைந்துவிடும். ஆகவே மலச்சிக்கல், நீர்க்கடுப்பு ஏற்படாமல் நார்ச்சத்துள்ள கீரைகள், காய்கறிகள் மற்றும் நீர்ச்சத்துள்ள காய்கறிகளை உண்பதன் மூலம் மல–சலச் சிக்கல் ஏற்படாமல் தற்காத்துக் கொள்ளமுடியும்.

**பெண்ணின்பா லொன்றைப் பெருக்காமல் :**

மனத்தினை எப்போதும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். அதாவது கெட்ட எண்ணங்கள், பெண் இச்சையை அதிகப்படுத்துதல், மற்றவர்க்குத் தீங்கு செய்ய வேண்டும் என்ற எண்ணம் போன்ற

காரணங்களால் மனமானது அசுத்தமடைகிறது. இது போன்ற எண்ணங்களாலும், செயல்களாலும் பிணி உண்டாவதற்கு வாய்ப்பு உள்ளது. அதாவது குறிப்பாக, பெண்களின் மேல் ஆசையை அதிகமாக்காமல் இருப்பதன் மூலமும் நாம் நோயின்றி வாழமுடியும். "பெண்கடமை திங்களுக்கோர் காலன்றி மருவோம்" என்ற தேரையரின் வாக்கின்படி, மாதத்திற்கு ஒரு முறை மட்டுமே இல்லற வாழ்க்கையில் ஈடுபட வேண்டுமென அறிவுறுத்துகிறார்.

**உண்ணுங்கால் நீர்சுருக்கி :**

நாம் பொதுவாகவே தண்ணீரினைச் சுட வைத்து அதாவது சுருக்கிக் குடிக்க வேண்டும். நீரினைச் சுடவைத்துச் சுருக்குவதன் மூலம், அந்தத் தண்ணீரிலுள்ள மலினங்கள், நோய்க் கிருமிகள், நுண்ணுயிரிகள் அனைத்தும் நீங்கி தண்ணீரானது சுத்தமடைகிறது. இவ்வாறு தண்ணீரைச் சுடவைத்துச் சுருக்கிப் பருகுவதனால், மயக்கம், வாத, பித்த, கப தோடங்கள், கண்ணோய், செவிக்குத்தல், குன்மம் (வயிற்று வலி), சூலை (உடல் நோவு, வலி), கோழை (சளி, இருமல்), சுரம், விக்கல், வாந்தி தீருவதுடன் உண்ட உணவுகள் முறையாகச் சீரணமாகும்.

**உண்ணுங்கால் மோர்பெருக்கி:**

மோரில் தண்ணீர் நிறைய சேர்த்துப் பருக வேண்டும் என்பதனையே மோர்பெருக்கி என்று தேரையர் கூறுகின்றார். இதனையே நாம் நீர் மோர் என்று வழக்கத்தில் கூறுவதுண்டு. இன்றைய காலக்கட்டத்தில் அனைவருமே தயிரினை அப்படியே நீர் சேர்க்காமல் பயன்படுத்துவதனால் நீர் மோர் என்ற பழக்கம் சிறிது சிறிதாக வழக்கொழிந்து வருகிறது. பொதுவாக, தயிர் மந்த தன்மையுடையது: வாத உடலினர்க்கு ஏற்றதல்ல. ஆகவே நாம் தயிராக உண்பதைவிட நீர்மோராகப் பயன்படுத்தினால் நன்று.

உணவின் முடிவில், மோர் சேர்ந்த உணவு உண்பது தமிழரின் மரபு. இது மல–சலக்கட்டு உண்டாகாமல், உடல் வெப்பத்தைத் தணிக்கும். "நீரைவிட்டு மோரைப் பெருக்கு" என்னும் பழமொழிப்படி அன்று கடைந்த மோரை நீர்விட்டுப் பெருக்கி, தாராளமாய்ப் பயன்படுத்திவர கணுக்கால் வீக்கம், வலி, முதலியன தீர்வதுடன, சிறுநீர் இயல்பாக இறங்கும். வயிற்றுவலி, இரத்த சோகை, பேதி, தாகம், மகோதரம், பசிமந்தம் முதலிய நோய்களில் பத்திய பொருளாகவும் மோர் வழங்கப்படுகிறது.

**உண்ணுங்கால் நெய்யுருக்கி:**

நெய்யை உருக்காமல் உணவில் சேர்த்துச் சாப்பிட்டால் வயிற்றில் மந்தத்தை உண்டுபண்ணும். ஆகவே நெய்யை உருக்கி உண்ண வேண்டும் என்பதைத் தேரையர் உண்ணுங்கால் நெய்யுருக்கி என்று கூறுகின்றார். சுடுசோற்றில் நெய் விட்டுப் பிசைந்து சாப்பிட்டால், இது உடலிலுள்ள கொதிப்பை ஆற்றி; குடற்புண்ணை நீக்கும். இது எலும்பு மச்சை தாதுவை விருத்தி செய்து இளைப்புநோய் முதலிய நோய்களுக்கு இடங்கொடுக்காமல் பாதுகாக்கும்.

சிற்றுண்டிகளை நெய்யில் வேகவைத்து உண்பது சிறந்தது. சோற்றுக் கொதிநீரில் சிறிது நெய் சேர்த்து அருந்த வயிற்றுவலி நீங்கும்.

நெய்யில் பனங்கற்கண்டு சேர்த்து அருந்தினால் உடற்சூடும், புகையிருமலும் நீங்கும். நெய்யைத் தலையில் தேய்த்து மூழ்கிவர, இரசதாதுவின் கொதிப்பால் ஏற்பட்ட எரிச்சல், பித்தம், மூர்ச்சை, இரத்தபித்த நோய் முதலியன நீங்கும். படுக்குமுன் உள்ளங்காலில் நெய்பூசித் தவிடு ஒற்றி, காலையில் கழுவிச் சந்தனம் பூசிவர கண்ணோய்கள் அணுகாது.

**உண்பவர்தம் பேருரைக்கிற் போமே பிணி:**

தமது வாழ்வியல் முறையில், பெண்ணின் மேல் ஆசைகளை அதிகமாக ஏற்படுத்திக் கொள்ளாமலும், மல–சலச் சிக்கல் ஏற்படாமலும் உணவுமுறைகளையும், பழக்க வழக்கங்களையும் கடைப்பிடித்தும், உணவில் நெய்யினை உருக்கியும், மோரினை நீர்விட்டுப் பெருக்கியும், தண்ணீரினைக் கொதிக்க வைத்தும் பயன்படுத்தி வருபவர்கள் பெயரினை உச்சரித்தாலே நமக்கு நோய் வாராது என்று தேரையர் கூறுகின்றார்.

சித்த மருத்துவத்தில், தேரையர் கூறும் பிணியணுகா விதிகளை நாம் கடைப்பிடித்து, வாழ்வதன் மூலம் நாமும் நம்மைச் சார்ந்தவர்களும் நோயின்றி நீடுழி வாழ முடியும்.

பிணியணுகாவிதி பேணுவோம் !!!

நோயின்றி வாழ்வோம் !!!

# அரசு விழாக்கள் – ஏப்பிரல் 2021

**வ.வே.சுப்பிரமணிய அய்யர் (1881–1925)**

வ.வே.சு. அய்யர் 2.4.1881 அன்று பிறந்தார். இவருடைய முழுப் பெயர் 'வரகனேரி வேங்கட சுப்பிரமணியம்'.

இவர் திருச்சியிலுள்ள ஆங்கில மிஷினரி பள்ளியில் சேர்ந்து ஆங்கிலத்துடன் இலத்தீன் மொழியும் கற்றார். ஆங்கிலத்திலும், தமிழிலும் நல்ல புலமை பெற்றார். பின்னர் வடமொழியான இந்தியையும், உருது, பிரெஞ்சு மொழிகளையும் கற்றார்.

வ.வே.சு. சென்னை சட்டக் கல்லூரியில் பி.எல். படிப்பில் சேர்ந்து பட்டமும் பெற்று, திருச்சி நீதிமன்றத்தில் வழக்கறிஞராகப் பணியாற்றத் தொடங்கினார். வ.வே.சு. அய்யர் வழக்கறிஞரான பிறகும் போதிய வருமானம் இல்லாததால் இரங்கூன் சென்றார். இரங்கூனும் ஆங்கிலேய ஆதிக்கத்தின் கீழ்



இருந்தது. அங்கு ஆங்கிலேய பாரிஸ்டர் ஒருவரிடம் உதவியாளராக வேலைக்குச் சேர்ந்தார்.

ஆங்கிலேயரின் ஆதிக்கத்தின் கீழ் அடிமைப்பட்டிருந்த நாடுகளைச் சேர்ந்த மக்கள், சட்டக் கல்லூரிகளில் சட்டம் பயின்று உயர் நீதிமன்றங்களில் வழக்கறிஞர்களாகப் பணியாற்ற வேண்டுமாயின், இலண்டனுக்குச் சென்று பாரிஸ்டர் பட்டம் பெற வேண்டும் என்ற நிலை இருந்தது. எனவே இலண்டன் சென்று பாரிஸ்டர் பட்டம் பெற விரும்பி இலண்டன் சென்று, அங்குப் புகழ் வாய்ந்த ஆபிரகாம் லிங்கன் கல்லூரியில் பாரிஸ்டர் பட்டம் பயின்றார்.

இலண்டனில் உள்ள இந்தியா விடுதியில் தங்கி சட்டக் கல்லூரியில் சேர்ந்த சுதந்திர போராட்ட வீரர் சாவர்கர் இலண்டன் நகரில் அபிநவ் பாரத் சங்கத்தின் கிளையை உருவாக்கினார். அபிநவ் பாரத் சங்கத்தின் உண்மையான பெயர் சுதந்திர இந்தியச் சங்கம் என்பதாகும்.

இந்தச் சமயத்தில்தான், வ.வே.சு.வும் இந்தியா விடுதியில் தங்கினார். இங்கு வந்தது முதல் வ.வே.சு.வும் முழுநேர தேசபக்தராக மாறினார். நாளடைவில் தன் குடும்பச் சூழ்நிலை அனைத்தையும் மறந்து தீவிர தேசபக்தரானார். சாவர்கர் போலவே இவரும் செயல்படத் துவங்கினார்.

புரட்சியை எந்த வகையிலாவது உருவாக்கி ஆங்கிலேயரை நம் நாட்டை விட்டு வெளியேற்ற வேண்டும் என்ற எண்ணம் வ.வே.சு. அய்யரின் மனதில் வேரூன்றி விட்டது. வ.வே.சு. அய்யர் இலண்டனில் இருந்துகொண்டே தமிழ்நாட்டு இதழ்களுக்குக் கதைகள், கட்டுரைகள், கவிதைகளைத் தொடர்ந்து எழுதி சுதந்திர வளர்ச்சியைத் தனது எழுத்தாற்றல் மூலம் பரப்பி வந்தார்.

பாரிஸ்டர் பட்டம் பெற்றால் பிரிட்டிஷ் அரசுக்குரிய அரசு விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொள்ள வேண்டும். அதன் பிறகுதான் பாரிஸ்டர் என்ற பட்டமே வழங்கப்படும். ஆனால் ஆங்கிலேய அரசைத் தனது எதிரியாகக் கருதிய வ.வே.சு. இதன் காரணமாக பாரிஸ்டர் பட்டத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. பிரிட்டிஷ் அரசுக்கு விசுவாசமாக உறுதிமொழி எடுத்துக்கொள்ள வ.வே.சு. அய்யர் மறுத்துவிட்டார் என்ற காரணத்துக்காக பிரிட்டிஷ் போலீஸ் அவர்

மீது சந்தேகப்பட ஆரம்பித்து, அவருக்குப் பல தொல்லைகள் தந்தது.

சாவர்கர் கைது செய்யப்பட்டார். பிறகு பிரிட்டிஷ் அரசு இலண்டனில் உள்ள இந்தியா விடுதியைக் கலைக்கும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டது. வ.வே.சு. அய்யருக்கும் மிகுந்த தொல்லை தர ஆரம்பித்தது. இதனால் இலண்டனில் இருந்த இந்திய தேச பக்தர்களும், அய்யரும் இலண்டன் நகரிலிருந்து வெளியேறி பிரெஞ்சு நாட்டின் தலைநகரான பாரீசுக்குச் சென்றனர். மீண்டும் இலண்டன் சென்றால் போலீசாரின் தொல்லைகளுக்கு ஆளாக நேரிடும் என்று எண்ணி பல்வேறு வேடங்கள் போட்டு இந்தியாவிற்கு வந்தார்.

இங்கிலாந்து நாட்டில் இருந்து தப்பித்து புதுச்சேரி வந்த வ.வே.சு.வை எப்படியாவது பிடித்துவிட வேண்டும் என்று எண்ணி ஆங்கிலேய அரசு திட்டம் தீட்டிக் கொண்டிருந்தது. இந்த நிலையில், ஆஷ் துரையைக் கொன்ற வாஞ்சிநாதன் புதுச்சேரி வந்து வ.வே.சு. அய்யரிடம் துப்பாக்கி சுடும் பயிற்சி பெற்றவர் என்ற செய்தி பரவியது. இதைக் காரணமாக்கி ஆஷ் துரை கொலை வழக்கில் அய்யரையும் சேர்த்து அவரை கைது செய்யத் திட்டமிட்டது.

நாட்கள் ஆக, ஆக வ.வே.சு. அய்யர்க்கு வன்முறை மூலம் இந்தியாவிற்கு சுதந்திரம் கிடைக்காது என்பதில் நம்பிக்கை ஏற்பட்டது. காந்தியடிகளின் அகிம்சை முறைதான் இந்தியாவிற்கு விடுதலை பெற்றுத் தரும் என்பதில் வ.வே.சு. அய்யர் அதிக நம்பிக்கை கொண்டார். இந்திய விடுதலைக்கு அகிம்சை முறையே சிறந்த ஆயுதம் என்பதை மனதில் பதித்து, புதுச்சேரிக்கு வந்த காந்தியடிகளிடம் நான் இனிமேல் தங்களின் சத்தியாகிரக அகிம்சை முறையைப் பின்பற்றுவேன் என்று உறுதியாகக் கூறினார்.

மகாத்மா காந்தியடிகளிடம் கொடுத்த வாக்குப்படி மக்களிடையே வ.வே.சு. அய்யர் அகிம்சையைப் பரப்பி வந்தார். ஓர் எழுத்தாளராக, சிறந்த பத்திரிகையாளராக, ஒழுக்கசீலராக, நேர்மை தவறாத விடுதலை வீரராக, தமிழ் இலக்கியத்தில் சிறந்தவராக, பலநாடுகள் சுற்றிய அனுபவமிக்கவராக வ.வே.சு. அய்யர் திகழ்ந்தார்.

திருநெல்வேலி மாவட்டம், சேரன் மாதேவியில் ஒரு குருகுலத்தை ஏற்படுத்தி, அதற்குத் 'தமிழ்நாட்டுக் குருகுலம்' என்று பெயரிட்டார். 'பால பாரதி' என்ற ஒரு மாத இதழையும் நடத்தி வந்தார். அவரது நண்பர்கள் 'தேசபக்தன்' என்ற பத்திரிகைக்கு ஆசிரியராகவும் ஆக்கினர். பல சிறந்த நூல்களையும் எழுதினார். தாய்மொழிக் கல்வியை வலியுறுத்தி வந்தார்.

3.06.1925–ஆம் ஆண்டு வ.வே.சு. அய்யர் தனது மகள் சுபத்திரையுடன் குற்றாலம் சென்றார். அப்போது கால் இடறி நீரில் விழுந்த தன் மகளைக் காப்பாற்றும் முயற்சியில் இருவருமே மூழ்கி உயிரிழந்தனர்.

நாட்டு விடுதலைக்காக அசாதாரண செயல்களில் ஈடுபட்ட வ.வே.சு.அய்யர் நினைவு இல்லம் திருச்சிராப்பள்ளி மாவட்டம், 37, வரகனேரி அக்ரஹாரத்தில் 05.05.1999 அன்று திறந்து வைக்கப்பட்டது.

**தியாகி பி.சீனிவாசராவ் (1907–1961)**

தோழர் சீனிவாசராவ் தென் கன்னடம் – படகாராவில் 10.4.1907–ஆம் ஆண்டு பிறந்தார். கல்வியில் முதல் மாணவனாகத் திகழ்ந்தாலும், விடுதலை வேட்கையினால் படிப்பில் கவனம் செலுத்த இயலவில்லை. காந்தியின் மீது கொண்ட பற்றினால் அவரது ஒத்துழையாமை இயக்கம், உப்பு சத்தியாகிரகம், சுதேசி இயக்கம் போன்றவற்றில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார்.

“அந்நிய துணியைப் புறக்கணிப்போம். விற்பனை செய்யும் கடைகளில் மறியல் செய்வோம்” என்ற காங்கிரஸின் கட்டளையை ஏற்று, மறியல் செய்து



கைது செய்யப்பட்டார் சீனிவாசராவ்.

1935–இல் ஜார்ஜ் மன்னர் பட்டத்திற்கு வந்த 25 ஆவது ஆண்டு வெள்ளி விழா மிகவும் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. டில்லி தர்பாரில் விழாவுக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. இதை எதிர்த்து, ராவும் அவரது நண்பர்களும் துண்டு பிரசுரங்களை விநியோகம் செய்தனர். இதனால் ஆத்திரமுற்ற ஆங்கிலேய அரசு அவரை கைது செய்து சிறையில் அடைத்தது. பின்னர் வேலூர் சிறையில் இருந்தபொழுது, தன் நண்பர் கான் கொடுத்த “கம்யூனிஸ்ட் மானிஃபெஸ்டோ” நூலை படித்தார். பின்னர் லெனின் எழுதிய “ஏகாதிபத்திய அரசாங்கமும் – புரட்சியும்” என்ற நூலைப் படித்து கம்யூனிஸ்ட் ஆக மாறினார். சிறையிலிருந்து வெளிவந்து “தொழிலாளர் பாதுகாப்பு சங்கத்தில்” சேர்ந்து ‘மூக்குத்தூள்’ என்ற தொழிலாளர் யூனியனை ஆரம்பித்து, அதன் செயலாளராகத் தொண்டாற்றினார்.

1937–இல் ‘ஜனசக்தி’ என்ற வார பத்திரிகையும், ‘நியூ ஏஜ்’ என்ற ஆங்கில மாத இதழும் ஆரம்பிக்கப்பட்டது. இதில் இவருக்கு நிர்வாகப் பொறுப்புக் கொடுக்கப்பட்டது.

தமிழ்நாடு செழிப்பான பூமியாகவும் மண் வளமிருந்தாலும் உழைக்கும் உழவர்களின் வாழ்வு முன்னேற்றம் அடையவில்லை. இதன் காரணமாகத் தமிழ்நாட்டில் ஜமீன் ஒழிப்பு மாநாடுகளும், ராயத்துக்கள் மாநாடுகளும், லேவாதேவி ஒழிப்பு மாநாடுகளும் நடந்தன. இதன் காரணமாக விவசாயிகளை ஒன்றிணைக்க 14.6.1943–இல் “கிசான்” விவசாய சங்கம் ஏற்படுத்தப்பட்டது. சீனிவாசராவ் இதன் செயலாளராக நியமிக்கப்பட்டார். இதன் காரணமாக ராவ் உழவர்களின் வாழ்க்கையை நன்கு புரிந்து கொண்டார். தன்னுடைய மார்க்சிய ஞானத்தால் உழவர்களைத் திரட்டி, பிரச்சினைகளுக்குத் தீர்வும் கண்டார்.

தஞ்சை மாவட்டத்தில் காவிரியாற்றின் படுகை நிலங்களெல்லாம் மிராசுதாரர்களுக்கே சொந்தமாக இருந்தன. மிராசுதாரர்கள் வைத்ததே சட்டமாக இருந்தது. இந்தச் சமயத்தில் விவசாயிகள் சங்கம் தஞ்சை மாவட்டம் தென்பரையில் துவங்கப்பட்டது. மிராசுதாரர்களுக்கு பயந்து சங்க கூட்டத்தில் கலந்து கொள்ள உழவர்கள் மிரளுவார்கள். இரவில்தான் ஒன்று கூடுவார்கள். எனவே இக்கூட்டங்கள் அமாவாசை இரவில்தான் கூட்டப்படும். இதற்கு “அமாவாசை கூட்டங்கள்” என்ற ஒரு பெயரும் உண்டு. இந்தக் கூட்டங்களின் மூலம் விவசாயிகள் ஒன்று திரண்டு போராடினார்கள். மிராசுதாரர்கள் பணிவதைத் தவிர வேறு வழியில்லாமல் போனது. இதன் மூலம் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது.

இந்த ஒப்பந்தத்தில் பண்ணையாட்களைச் சாட்டையால் அடிப்பது, சாணிப்பால் கொடுமை செய்வது ஆகியவற்றை நிறுத்த வேண்டும் என்று முடிவெடுக்கப்பட்டது. மேலும் கூலி உயர்வு ஆணுக்கு அரை மரைக்காலிலிருந்து முக்கால் மரைக்காலாகவும், பெண்ணுக்குக் கால் மரைக்காலிலிருந்து அரை மரைக்காலாகவும் உயர்த்த வேண்டும் என்று போராடி வெற்றியும் பெற்றனர்.

1944 மே மாதம் 3–ஆம் தேதி நிலப் பிரபுத்துவப் பிடிப்புள்ள மன்னார்குடியிலேயே தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் முதல் மாநாட்டை நடத்தினார்கள். இதன் தலைவராக ராவ் தேர்ந்தெடுக்கப்பட்டார். தென்பரையில் உதயமான விவசாயிகள் சங்கத்தைத் தமிழ்நாடெங்கும் பரப்பினார் சீனிவாச ராவ். தமிழ்நாடெங்கும் பரந்து விரிந்து கிடக்கும் விவசாயிகள் சங்கத்திற்கு வித்திட்ட தோழர் பி. சீனிவாசராவ், “விவசாயிகள் சங்க விதிமுறைகள்” என்ற நூலை வெளியிட்டார்.

1946–இல் நடைபெற்ற தென்னிந்திய ரயில்வே தொழிலாளர் போராட்டத்திலும் கலந்து கொண்டு சிறையில் அடைக்கப்பட்டார். விவசாயிகளின் பிரச்சினைக்காக ஒரு தனிப்பத்திரிகை வேண்டுமென்று கருதி, 1953 செப்டம்பர் 15–இல் ‘உழவன் குரல்’ என்ற மாதமிருமுறை பத்திரிகையை வெளியிட்டார்.

சீனிவாசராவ் கலைத்துறையிலும் மிக ஆர்வம் கொண்டவராக விளங்கினார். கட்சி வளர்ச்சிக்கும், கொள்கைகளைப் பரப்புவதற்கும் கலைத்துறை மிக அவசியம் என்று வலியுறுத்தினார். இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் நிதி வசூலுக்காகவும் கொள்கைகளை மக்களிடையே பரப்ப வேண்டுமென்பதற்காகவும் நாடகங்களை நடத்தினார்.

“தமிழ்நாடு புதுமைக் கலா மண்டபம்” என்ற நாடகக் குழுவை அமைத்து அதன் பொறுப்பாளராகவும் இருந்தார். இதன் மூலம் பல்வேறு நாடகங்களை நடத்தினார். சில நாடகங்களில் சீனிவாசராவும் நடித்தார். தனது நாடகங்களில் பழைய ரூபங்களில் புதிய கருத்துகளை நுழைத்தார். நாடகங்களில் புரட்சிக் கருத்துகளைப் பரப்புவதே அவரது நோக்கமாக இருந்தது.

1961 செப்டம்பர் 1–ஆம் தேதி நில உச்ச வரம்பு மசோதாவைத் திருத்தவேண்டுமென்று இந்திய கம்யூனிஸ்ட் கட்சி கிளர்ச்சியை உண்டாக்கியது. அதிலும் இவர் பங்கேற்றார். இவர் செப்டம்பர் 29–ஆம் தேதி இரவு இயற்கை எய்தினார்.

பண்ணையடிமைகளாய், சவுக்கடிக்குட்பட்ட விவசாயக் கூலிகளை மீட்டெடுத்து, போராடி

கீழ்த் தஞ்சை மாவட்ட மக்களின் உரிமைகளை மீட்டெடுத்த தியாகி சீனிவாசராவ் நினைவு மண்டபம் திருவாரூர் மாவட்டத்தில் 14.11.2009 அன்று திறந்து வைக்கப்பட்டது.

**பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் (1930–1959)**

தஞ்சாவூர் மாவட்டம், பட்டுக்கோட்டை வட்டத்தில் உள்ள செங்கப்படுத்தான்காடு கிராமத்தில் 13.04.1930–இல் கல்யாண சுந்தரம் பிறந்தார். கம்யூனிஸ்ட் கட்சிக் கூட்டங்கள் மற்றும் பிற நிகழ்ச்சியில் கலந்துகொண்டு பாட்டுக் கட்டிப் பாடுவது இவரது வழக்கமான பணியாகும்.

இவர் தன் எட்டு வயதில் 'நல்லதைச் சொன்னா நாத்திகனா ?'' என்று தாம் எழுதிய பாடலைத் தன் அண்ணனிடம் பாடிக்காட்டி பாராட்டுப் பெற்றார்.

1949–இல் புதுச்சேரிக்குச் சென்று பாரதிதாசனுக்கு உதவியாளராகச் சேர்ந்து பாடல்களைப் படி எடுப்பதும் பாரதிதாசனின் "குயில்" என்னும் ஏட்டைப் பார்த்துக் கொள்வதும் இவருடைய பணியாக இருந்தது. 1954 ஆகஸ்ட்டு முதல் தேதி திண்டுக்கல் காந்தி மைதானத்தில் தமிழ்நாடு விவசாய சங்க மாநாட்டையொட்டி, 'கண்ணின் மணிகள்' என்ற நாடகம் அரங்கேறி பாராட்டைப் பெற்றது. இந்த நாடகத்தில் இவர் பாடல் எழுதியதோடு போலீஸ்காரராகவும் நடித்தார். இந்த நாடகத்திற்குத் தலைமை வகித்துப் பேசிய தோழர் ஜீவானந்தம், "மக்கள் கவிஞருக்குரிய தர உயர்வு பட்டுக்கோட்டையார் பாடல்களில் ஒளிவிடுகின்றது" என்று கூறினார்.



தத்துவம் நிறைந்த பாடல்களை எழுதியதன் மூலம் தமிழ்த் திரையுலகில் புகழின் உச்சிக்குச் சென்றார். 1954–இல் சென்னைக்கு வந்து 'படித்த பெண்' என்ற படத்திற்குப் பாடல் எழுதினார். 1955–இல் வெளிவந்த மகேஸ்வரி என்ற படத்தில் இவரது பாடல் வெளிவந்தது.

சேலம் மார்டன் தியேட்டர்ஸ் தயாரித்து, மெல்லிசை மன்னர் விஸ்வநாதன் – இராமமூர்த்தி இசையில் வெளிவந்த பாசவலை என்ற திரைப்படத்திற்குப் பட்டுக்கோட்டையார் எழுதிய பாடல்கள் அவருக்குப் பெரும் புகழைத் தேடித் தந்தன. எம்.ஜி.ஆரின் 'நாடோடி மன்னன்' படத்தில் எழுதிய 'தூங்காதே தம்பி, தூங்காதே' என்ற பாடலால் இவர் பெரும் புகழ் பெற்றார்.

இவருக்கு 11.9.1957 அன்று பாவேந்தர் பாரதிதாசன் தலைமையில் திருமணம் நடைபெற்றது. "செய்யும் தொழிலே தெய்வம்" என்று சொன்ன பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் திரைப்படப் பாடலாசிரியராக வருவதற்கு முன்பு சுமார் 18 தொழில்களைச் செய்திருக்கிறார்.

விவசாயம், மாடுமேய்த்தல், மாட்டு வியாபாரம், மாம்பழ வியாபாரம், முறுக்கு வியாபாரம், மீன் பிடித்தல், மேடைகளில் சுயமரியாதை பாட்டுப் பாடுதல், நாடகங்களில் நடித்தல், கிராமிய நடனம் ஆடுதல், தண்ணீர் வண்டி ஓட்டுதல், மிஷின் ஓட்டுதல், அரசியல், புரட்சிக்கவிஞரின் கவிதைகளை பிரதி எடுத்தல், பாடல் எழுதுதல் என்று பல வேலைகளைச் செய்திருக்கிறார்.

மக்களுக்காகப் பாடல்கள் எழுதிய பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் வாழ்ந்த காலத்தில் முற்போக்கு மன்றத்தால் வழங்கப்பட்ட சிறப்புப் பட்டம்தான் 'மக்கள் கவிஞர்'. பின்னர் 'பாட்டாளி வர்க்கக் கவிஞர்' 'முற்போக்கு கவிஞன்', 'புதுமைக் கவிஞன்' என்று பாராட்டி சூட்டிய பட்டங்கள் பல.

தமிழ்த் திரையுலகில் கொடிகட்டிப் பறந்த கவிஞர்களில் மிக மிகக் குறைவாகப் படித்தவர் பட்டுக்கோட்டையார்தான். வெறும் மூன்றாம் வகுப்பு வரை மட்டுமே படித்துள்ளார்.

பட்டுக்கோட்டையாரின் பாடல்களில் அவரது அனுபவத்தின் நிழலேஅதிகமாக இருந்தது. தமது மண்ணும், தான் சந்தித்த மக்களும் அவர்களின் வாழ்க்கையும்தான் அவருக்குப் பாட்டுப்பொருளாக அமைந்தன. நாட்டுப்பாடல்கள் அவர் மனத்திலும் முணுமுணுப்பிலும் இருந்தன.

இவரது நாட்டுப் பாடல்களில் உழைக்கும் மக்கள் பல்வேறு காலமாகச் சமூகத்திலே நசுக்கப்பட்டு வந்ததும், அவர்களின் ஆவேசக்குரலும்மிகுந்திருந்தன. இவரின் பாடல்கள் அடித்தட்டு மக்களின் இன்ப, துன்பங்களைச் சித்திரிக்கும் பாடல்களாக இருந்தன. அந்தப் பாடல்கள் நம்பிக்கையோடு எதிர்காலத்தை நோக்கும் கண்ணோட்டத்தைக் கொண்டிருந்தன. பாரதியாருக்குப் பிறகு இவரது பாடல்களில்தாம் பொதுமைச் சிந்தனைகள் வலிமையுடனும், வனப்புடனும் இருந்தன.

சுமார் 57 திரைப்படங்களுக்கு ஏறத்தாழ 210 பாடல்கள் எழுதியுள்ளார். தனது 29–ஆம் வயதில் திடீரென 08.10.1959 அன்று இயற்கை எய்தினார். பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் அவர்கள் சமுதாய முன்னேற்றம் குறித்து முற்போக்குச் சிந்தனையுடன் கிராமியப் பாடல்கள் வழியில் பாடல்கள் எழுதி, உணர்ச்சிகளையும், தத்துவங்களையும் எளிய வடிவில் கவிதைகளாகப் படைத்தவர். 1995–ஆம் ஆண்டு தமிழ்நாடு அரசு இவரது படைப்புகள் அனைத்தையும் அரசுடைமையாக்கியது.

பட்டுக்கோட்டை, நாடியம்மாள்புரம், முத்துப் பேட்டைச்சாலையில்பட்டுக்கோட்டைகல்யாணசுந்தரம் அவர்களின் மணிமண்டபம் 13.12.1999 அன்று திறந்து வைக்கப்பட்டது.

**வீரன் சுந்தரலிங்கனார் (1770–1799)**

பாஞ்சாலங்குறிச்சி அருகே உள்ள கவர்ணகிரி என்ற ஊரில் 1770–ஆம் ஆண்டு ஏப்ரல் 16–ஆம் நாள் பிறந்தார் வீரன் சுந்தரலிங்கம். இவரது தந்தை கட்டபொம்முவின் படை வீரர் ஆவார்.

சுந்தரலிங்கம் வீரவிளையாட்டுகளையோ அல்லது வீரக்கலைகளையோ எதையும் முறையாகக் கற்றுக் கொள்ளவில்லை. இதைக் கற்றுக் கொடுக்கும் அளவிற்கு அவரது தந்தைக்கு வசதியில்லை. இதனால் சுந்தரலிங்கம் சில கலைகளைத் தானாகவே கற்றுக் கொண்டார். விளையாட்டில் கூட தோல்வி என்பதைச் சந்திக்காதவர்.

இவர் தனக்குக் கிடைத்த வருமானத்தின் மூலம் வாள், சிலம்பம், வேல், களரி உள்ளிட்ட தற்காப்புக் கலைகளையும் கற்றுத் தேர்ந்தார். தான் கற்ற



தற்காப்புக் கலையினை மற்றவர்களுக்கும் கற்றுத்தர எண்ணினார். ஏழை, எளிய குடும்பத்து இளைஞர்களும் தற்காப்புக் கலையைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று எண்ணி இளைஞர் தற்காப்புப் பள்ளி ஒன்றை நிறுவினார்.

வீரன் சுந்தரலிங்கத்தின் நேர்மையையும், வீரத்தையும், புத்திசாலிதனத்தையும் அறிந்த வீரபாண்டிய கட்டபொம்மன் பல்வேறு படைகளுக்கும் பல்வேறு வீரர்களுக்கும் வீரன் சுந்தரலிங்கத்தைப் படைத் தளபதியாக அறிவித்தார்.

யானைப்படை, குதிரைப்படை, வில்படை, வல்லயம் வளைத்தடிப்படை, கம்புப்படை, ஈட்டிப்படை, வாள்படை, ஆயுதக்கிடங்கு, வெடிமருந்து கிடங்கு, தானியக்கிடங்கு ஆகியவை எல்லாம் மாவீரன் சுந்தரலிங்கத்தின் கட்டுப்பாட்டுக்குள் இருந்தன.

5.7.1799–ஆம் ஆண்டு ஆங்கிலேயப்படை பாஞ்சாலங்குறிச்சியை முற்றுகையிட்டுத் தாக்கியது. கட்டபொம்மன் தனது படைகளுடன் ஆங்கிலேயப் படைகளை வீராவேசத்துடன் எதிர்த்தார். இப்போரில் ஒற்றர் படைத் தளபதியாக வீரன் சுந்தரலிங்கமும் இடம் பெற்றிருந்தார்.

ஆங்கிலேயப் படை, போரில் முன்னிலை பெறத் தொடங்கியது. இதைக் கவனித்த சுந்தரலிங்கம் ஆங்கிலேயர்களின் பலத்திற்குக் காரணமான ஆயுத பலத்தை அழித்துவிட்டால் ஆங்கிலேயர்களை அடக்கிவிடலாம் என்று எண்ணினார்.

தனது ஒற்றர் படை மூலம் ஆங்கிலேயர் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையின் கிழக்கு

வாயிலிலிருந்து ஒரு கிலோ மீட்டர் தொலைவில் புதர் மறைவில் தங்கள் ஆயுதக் குவியலைக் கொட்டி வைத்திருந்ததை அறிந்தார். கட்டுக்காவல் அதிகமிருப்பதால் மற்றவர்களை விட தன்னால்தான் தற்கொலைத் தாக்குதலைக் கச்சிதமாக முடிக்க முடியும் என்ற முடிவிற்கு வந்து, தனது மாமன் மகளான வடிவிற்குச் செய்தியனுப்பி ஆட்டுமந்தையை ஆயுதக் குவியல் இருக்கும் புதர் பக்கமாக ஓட்டிவரச் செய்தார். தானும் ஆட்டு இடையனாக வேடமிட்டுக் கொண்டார். காவலுக்கு நின்ற ஆங்கிலேயச் சிப்பாயின் அருகில் ஆட்டு மந்தையை ஓட்டி வருமாறு வடிவிடம் கூறியிருந்தார். ஆட்டு மந்தையும், வடிவும் ஆயுதக் குவியல் அருகே வந்ததைப் பார்த்த காவலாளி செய்வதறியாது திகைத்து சத்தம் போட்டுக் கொண்டே வடிவுக்கு அருகே ஓடிவந்தான்.

இத்தருணத்தை எதிர்பார்த்த சுந்தரலிங்கம் வாயில் கதவைத் தாண்டி உள்ளே நுழைந்துவிட்டார். இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு வடிவும் கோட்டையின் உள்ளே நுழைந்து விட்டாள்.

இதைக் கண்ட காவலாளி தன் துப்பாக்கியால் வானத்தைநோக்கிச்சுட்டான்.இச்சத்தத்தைக்கேட்டுப் பக்கத்துப் பாசறைகளில் இருந்த ஆங்கிலேயப் போர் வீரர்களும் ஆயுதக் கிடங்கின் அருகே கூடி விட்டனர். தான் செய்யப் போகும் இச்செயலை இந்தியத் தாய் தனக்குக் கொடுத்த பெரும் பாக்கியமாகக் கருதினார் சுந்தரலிங்கம். இதை அறிந்த சுந்தரலிங்கமும், வடிவும் தங்கள் கையில் வைத்திருந்த தீப்பந்தத்தை பூமியை நோக்கிச் சாய்த்துப் பிடித்தவாறு வெடிமருந்து குவியலுக்குள் புகுந்தனர். ஒரு நொடியில் ஆயுதக் கிடங்கின் அத்தனை வெடி மருந்துகளும் வெடித்துச் சிதறின. சிதறியது வெடிபொருட்கள் மட்டுமல்ல. அங்கே கூடி நின்ற ஆங்கிலேயச் சிப்பாய்களும்தான்.

1799–ஆம் ஆண்டு செப்டம்பர் 8–ஆம் நாள் நடைபெற்ற இச்சம்பவம் உலகின் முதல் தற்கொலைப் படைத் தாக்குதலாகும். ஒரு மனிதன் தன்னையே ஆயுதமாக்கித் தற்கொலைத் தாக்குதல் நடத்தியது, அதுவும் ஒரு பெண்ணுடன் இணைந்து இப்படியொரு திட்டத்தை வகுத்து வெற்றிகரமாகச் செயல்படுத்தியது உலகில் இதுதான் முதல் முறையாகும்.

உலகின் முதல் தற்கொலைப் படையை உருவாக்கி அதை வெற்றிகரமாகப் பயன்படுத்தி, தற்கொலைப் படை பயணத்தைத் தொடங்கி வைத்தவர் மாவீரர் சுந்தரலிங்கம். தான் பிறந்த சொந்த மண்ணை ஆங்கிலேயர்களிடமிருந்து காப்பாற்றவும், தன்னை நம்பியவர்களின் நம்பிக்கையை நிறைவேற்றவும் ஒரு மாவீரன் எடுத்துக் கொண்ட இச்செயல் இந்திய மண்ணிற்குப் பெருமை சேர்க்கும் ஒரு வீரதீரச் செயலாகும்.

தூத்துக்குடி மாவட்டம், பாஞ்சாலங்குறிச்சியை அடுத்துள்ள கவர்ணகிரி ஊராட்சி, வீரன் சுந்தரலிங் கனார் நினைவு குடியிருப்புப் பகுதியில் சுதந்திரப் போராட்ட வீரர் சுந்தரலிங்கம் மணி மண்டபம் 21.09.2007 அன்று திறந்து வைக்கப்பட்டது.

**தீரன் சின்னமலை (1756–1805)**

தீரன் சின்னமலை அவர்கள் ஈரோடு மாவட்டத்தில் உள்ள காங்கேயம் அருகில் மேலப்பாளையம் என்னும் சிற்றூரில் ஏப்ரல் 17, 1756 அன்று பிறந்தார். இவரின் இயற்பெயர் தீர்த்தகிரி. இவர் பழைய கோட்டை பட்டக்காரர் பரம்பரையைச் சேர்ந்தவர் என்பதால் இளம் வயதிலேயே தீர்த்தகிரி சர்க்கரை எனப் பெயர் பெற்றார்.

தீரன் சின்னமலை அவர்கள் இளம் வயதிலேயே மல்யுத்தம், வில்பயிற்சி, வாள் பயிற்சி, சிலம்பாட்டம், தடிவரிசை போன்ற பயிற்சிகளைப் பெற்று, போர்க்கலையில் சிறந்தவராக விளங்கினார். அப்போது கொங்கு நாட்டை மைசூர் மன்னர் ஆட்சி செய்ததால் கொங்குநாட்டு வரிப்பணம் சங்ககிரி வழியாக மைசூர் அரசிற்குச் சென்றது.

தீர்த்தகிரி அவர்கள் மைசூர் அரசுக்குக் கொண்டு செல்லும் வரிப்பணத்தைப் பிடுங்கி ஏழைகளுக்கு விநியோகித்தார். வரியைக் கொண்டு செல்லும் தண்டல்காரரிடம், “கொங்கு நாட்டு உழவர்கள் விதைக்கிறார்கள். மைசூர்காரருக்கு வரிப்பணம் ஏன் கொடுக்க வேண்டும்? இதுவரை தெரியாமல் வசூல் செய்துவிட்டார். இனிமேல் வசூல் செய்யவிடமாட்டோம். வசூல் என்ற பெயரில் ஒரு பணத்தைக் கூட கொண்டு செல்லவும் விடமாட்டோம்’’ என்றார்.



தண்டல்காரர் தீர்த்தகிரியிடம், 'தம்பி! இவ்வளவு உறுதியாகச் சொல்லும் நீ யாரென்று நான் தெரிந்து கொள்ளலாமா''? என்றார். அதற்குத் தீர்த்தகிரி, "நானா? சென்னிமலைக்கும் சிவன் மலைக்கும் இடையில் ஒரு சின்னமலை பறித்ததாகச் சொல்'' என்று சொல்லி அனுப்பினார். அது முதல் தீர்த்தகிரிக்குச் "சின்னமலை'' என்ற பெயர் வழங்கலாயிற்று.

1782–இல் திப்புசுல்தான் மைசூர் ஸ்ரீரங்கப்பட்டணத்தில் ஆட்சிக்கு வந்து கிழக்கிந்திய கம்பெனியாரை எதிர்த்துக் கடும்போர் செய்திருந்தார். அப்போது மாவீரன் சின்னமலை ஆயிரக்கணக்கான கொங்கு இளைஞர்களைத் திரட்டி மைசூர் சென்றார். திப்பு சுல்தானுக்கு உதவி செய்ததனாலும், கோவை கோட்டையை முற்றுகையிடச் சென்றதாலும் சின்னமலை மீது தீராத கோபம் ஆங்கிலேயர்களுக்கு ஏற்பட்டது.

ஆங்கிலேயப் படையானது கர்னல் மேக்ஸ்வெல் தலைமையில் இருமுறையும், ஹாரிஸ் என்பவன் தலைமையில் ஒருமுறையும் என மூன்றுமுறை தீரன் சின்னமலையிடம் தோல்விகண்டது. இதனை நினைக்க நினைக்க ஆங்கிலேயத் தளபதிகளுக்கு வெறுப்பாய் இருந்தது.

இனி கத்தி, ஈட்டி, வாள்வீச்சு செய்வது, குதிரைப் படையைப் பயன்படுத்தாமல் பீரங்கி, துப்பாக்கி, வெடிகுண்டுகள் மூலம் சின்னமலையைத் தோற்கடிக்க வேண்டும் என்று நினைத்த ஆங்கிலேயத் தளபதிகள் அதற்கான ஆலோசனைகளில் இறங்கினார்கள்.

தங்களது ஓடாநிலைக் கோட்டையை அழிப்பதற்காக ஆங்கிலேயப் படையானது முப்பத்தாறு பீரங்கிகள் மற்றும் பல துப்பாக்கிகளுடன் இன்னும் சில நாட்களில் அக்கோட்டையினை நோக்கி வரக்கூடும் என்பதை, முன்பு தன்னுடனும் திப்புசுல்தானிடமும் பணியாற்றிய சுபேதார் வேலப்பன் மூலம் அறிந்த சின்னமலை தேவையான பீரங்கிகளும், துப்பாக்கி குண்டுகளும், வெடிமருந்துகளும் தயாரிக்க தமக்கு ஏற்ற இடமாக விருப்பாட்சியில் கருமலைக் காடுகளைத் தேர்வு செய்து அங்குச் சென்றார்.

திட்டமிட்டபடி ஓடாநிலைக் கோட்டையினை ஆங்கிலேயப் படைகள் எட்டிப்பிடித்த போதிலும், தீரன் சின்னமலையோ, அவரது தம்பிகளோ, படைவீரர்களோ எவரும் இல்லாதது பெருத்த ஏமாற்றத்தை ஆங்கிலேயருக்கு அளித்தது. ஆனால் அங்கு சுபேதார் வேலப்பன் எழுதிய மடல் மட்டும் கிடைத்தது. அதைப் பார்த்து கோபம் அடைந்த ஆங்கிலேயர்கள் வேலப்பனை அங்கேயே சுட்டனர். பின்னர், சின்னமலை விருப்பாட்சியில் உள்ள கள்ளிக் கோட்டையில் இருப்பதைத் தன் ஒற்றர்கள் மூலம் அறிந்த ஆங்கிலேயர்கள் அவனைக் கைது செய்ய, சின்னமலையின் சமையற்காரன் நல்லான் என்பவனுக்கு இருபது காணி நிலமும், பொன்னும் பொருளும் தருவதாகக் கூறி அவனைத் தம் வழிக்குக் கொண்டு வந்தனர்.

இதனை அறியாமல் தீரன் சின்னமலையும் அவரது தம்பிகளும் உணவருந்த சென்றபோது, நல்லான் சற்றும் தாமதிக்காமல் வீட்டிற்கு முன்னிருந்த பெட்டியைத் தள்ளியதும், அதனுள் ஏற்கெனவே ஆங்கிலேயரால் ஏற்பாடு செய்யப்பட்ட சுரங்கப்பாதை வழியாக துப்பாக்கி வெடிகுண்டுகளுடன் வந்த ஆங்கிலேயப் படை வீரர்கள் மூவரையும் சுற்றி வளைத்தனர். பின்னர் அவர்கள் சங்ககிரி கோட்டைக்குள் அழைத்துச் செல்லப்பட்டனர்.

1805–ஆம் ஆண்டில் ஒருநாள் பகல்வேளை சங்ககிரிக் கோட்டையில் போலி நீதி விசாரணை நடைபெற்றது. ஆங்கிலேயர் அவர்களிடம் 'மன்னிப்பு' என்று கேட்டால் உயிருடன் விடுகிறோம் என்றனர். ஆனால் சின்னமலையும் அவரது தம்பிகளும் அதற்கு இணங்கவில்லையென்பதால், 1805–ஆம் ஆண்டு ஜூலை மாதம் 31–ஆம் நாள் நால்வரும் தூக்கிலிடப்பட்டனர்.

சென்னை, கிண்டி, திரு.வி.க. தொழிற்பேட்டையில் அமைந்துள்ள சுதந்திரப் போராட்ட வீரர் தீரன் சின்னமலை திருவுருவச் சிலைக்கு அவரது பிறந்தநாளான ஏப்ரல் திங்கள் 17–ஆம் நாள் அன்று ஆண்டுதோறும் தமிழ்நாடு அரசின் சார்பில் மாலை அணிவித்து மலர் தூவி மரியாதை செய்யப்படுகிறது. ஜூலை 31 அன்று தமிழ்நாடு அரசின் சார்பில் தீரன் சின்னமலை நினைவு நாள் கொண்டாடப்பட்டு வருகிறது.

மேலும் அந்த மாவீரரின் புகழுக்குப் பெருமை சேர்க்கும் வகையில் ஒவ்வோர் ஆண்டும் ஆடிப் பதினெட்டாம் நாளில் அவருக்கு விழா எடுக்கப் பட்டு வருகிறது. அன்னாரின் வீரத்தையும் தியாகத்தையும் நினைவுகூரும் வகையில் சேலம் மாவட்டம் சங்ககிரியில் தீரன் சின்னமலை நினைவுச் சின்னம் உருவாக்கப்பட்டு 23.12.2013 அன்று திறந்து வைக்கப்பட்டது.

ஈரோடு மாவட்டம், அரச்சலூர், ஓடாநிலையில் தீரன்சின்னமலை மணி மண்டபம் 01.03.2006 அன்று திறந்து வைக்கப்பட்டது.

**வள்ளல் அதியமான் நெடுமான் அஞ்சி**

அதியமான் நெடுமான் அஞ்சி, தகடூரை ஆண்ட அதியமான் மரபைச் சேர்ந்த சங்க காலக் குறுநில



மன்னர்களுள் ஒருவர். இவர் வாழ்ந்த காலம் கி.மு. 3–ஆம் நூற்றாண்டு முதல் கி.மு. 2–ஆம் நூற்றாண்டு வரையிலான காலப் பகுதியைச் சேர்ந்ததாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

அஞ்சியின் வீரமும், கொடைச் சிறப்பும் ஔவையார் முதலிய புலவர்களின் பாடல்களில் கருப்பொருள்களாக உள்ளன. திண்மையான உடல்வலிமை பொருந்தியவன் என்றும், சேரன், சோழன், பாண்டியன் உட்பட்ட ஏழு அரசர்களை எதிர்த்து நின்று வென்றவன் என்றும், இவனது அரண்மனை 'இல்லையென்று வருவோருக்கு அடையாத வாயிலைக் கொண்டது என்றும், அவனது கைகள் மழையைப் போல் ஈயும் தன்மையுடையன' என்றும் அதியமானின் வள்ளல் தன்மையைப் புகழ்ந்துரைப்பர். தனக்குக் கிடைத்த சாவா மருந்தாகிய நெல்லிக்கனியைத் தான் உண்ணாது "இவ்வளவு சிறப்பு வாய்ந்த இந்தக் கனியை நான் உண்பதை விட தாங்கள் உண்டால் நீண்ட நாள் நீங்கள் வாழ்வீர்கள். அதனால் தமிழுக்கும் நாட்டுக்கும் நன்மையும் பயனும் கிட்டும்." என்று கூறி ஔவையாருக்குக் கொடுத்தான். இது அதியமானின் கொடைத் திறனைக் காண்பிக்கிறது.

அக்காலத்தில் மலைநாட்டை ஆண்ட மலையமான் திருமுடிக்காரி என்பவனுடன் போரிட்டு அவனது தலைநகரமான திருக்கோயிலூரை நெடுமான் கைப்பற்றியதாகத் தெரிகிறது.

காரிக்குச் சார்பாக சேர மன்னன் பெருஞ்சேரல் இரும்பொறை என்பான் நெடுமான் அஞ்சியுடன் போர் தொடுத்தான். சோழ மன்னனும் பாண்டியனும் அதியமானுக்கு ஆதரவாக இருந்தனர். எனினும் அஞ்சி இப்போரில் தோற்று இறந்தான்.

வள்ளல் அதியமான் கோட்டம், அதியமான் கோட்டை கிராமம் தருமபுரி மாவட்டத்தில் அமைக்கப்பட்டு 28.02.2009 அன்று திறந்து வைக்கப்பட்டது.




தமிழ்க் கலைக்கழகத்தின் 81 ஆவது கூட்டம் 2021 மார்ச்சு மாதம் 04ஆம் நாள் நடைபெற்றது.
இக்கூட்டத்தில் அலுவல்சார், அலுவல்சாரா உறுப்பினர்கள் பங்கேற்றனர்

# திறவுகோல்!



சாவி – போர்த்துக்கீசியச் சொல்.

தாழக்கோல், தாக்கோல், திறவுகோல் என்பன தமிழ்ச்சொற்கள்!

"தாழ் என் கிளவி கோலொடு புணரின்
அக்கு இடை வருதல் உரித்தும் ஆகும்."
(தொல்காப்பியம், எழுத்ததிகாரம்: 386)

தாழ் + கோல் = தாழ் + அக்கு + கோல் = தாழக்கோல் எனப் புணர்ச்சி இலக்கணம் கூறும் தொல்காப்பியம்.

தாழ் = பூட்டு. பூட்டைத் திறக்கப் பயன்படும் கோல் தாழக்கோல்!

"பின் ஒரு பகல் போய்ச் செம்கை
பிதித்தனன் வலிப்பத் தள்ளி
வல்நிலைக் கதவு நூக்கித்
தாழக்கோல் வலித்து மாண்ட
தன் நிலைக் காப்புச் செய்தாள்
தனி மனக் காவல பூண்டாள்
அந்நிலை பிழைத்த தீயோன்
அநங்கத் தீ வெதுப்பப் போனான்."
(திருவிளையாடற் புராணம், அங்கம் வெட்டின படலம்: 1582).

"காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு"
(திருக்குறள்: 1251)

"எம்மனை யாம்மகிழ ஏழகம் மேற்கொளினும்
தம்மதில் தாழ்வீழ்த் திருக்குமே – தெம்முனையுள்
மானொடு தோன்றி மறலுங்கால் ஏழகத்
தானொடு நேராம் அரசு"
(புறப்பொருள் வெண்பா மாலை: 244).

பகைவர் அஞ்சிக் கோட்டைக்குள் புகுந்துகொண்டு மதிலைத் தாழிட்டுப் பூட்டிக்கொள்வர்!

"பளிக்கறை மண்டபம் பாவையைப் புகுக என்று
ஒளித்து அறை தாழ் கோத்து உள்ளகத்து இரீஇ
ஆங்குஅது தனக்கு ஓர் ஐவிலின் கிடக்கை
நீங்காது நின்ற நேர்இழை தன்னை"
(மணிமேகலை, பளிக்கறை புக்க காதை: ).

தாழ்கோத்தல் = கதவுகளுக்குப் பின்னால் பூட்டாகத் தாழ் என்ற கோல் செருகப்படும்.

இரண்டு தாள்வாய் / தாடை இணையுமிடம் தாள் / பூட்டு எனப்படும்.

தாள் > தாடை.

என் பள்ளிப்பருவத்தில் படித்த நூல்கள் : ஜீவரத்ன மாலை, மூடமதி திறவுகோல் (1952), விவேகசிந்தாமணி.

சாவி அப்போது திறவுகோல் எனப்பட்டது.

புதிய பூட்டு எனும் பொருளில் 'நயா தாளா' என இந்தியில் வழங்கப்படுகிறது. பூட்டு உருவாக்க நிறுவனம் 'நவதாள்'.

"தாழ்ப்பாள், நாதாங்கி, தொறக்குச்சி (திறவுக்குச்சி)" என்பன மக்கள் வழக்கு.

தாழ் – தாள். தாட்கோல் – தாக்கோல் (குமரி மாவட்டத் தமிழ்).

தாள்திறவாய்,
"நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய
கோயில் காப்பானே கொடித்தோன்றும் தோரண
வாயில் காப்பானே மணிக்கதவம் தாள்திறவாய்
ஆயர் சிறுமிய ரோமுக்கு அறைபறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்
வாயால் முன்னமுன்னம் மாற்றாதே யம்மா நீ
நேய நிலைக்கதவம் நீக்கலோ ரெம்பாவாய்."
(திருப்பாவை: 16).

தொல்காப்பியத்தில் தாழ் எனப்பட்டது காலப்போக்கில் தாள் ஆகிவிட்டது.

தாழக்கோல், தாக்கோல், திறவுகோல், திறப்பு எனப் பல தமிழ்ச்சொற்கள் இருப்பினும் 'சாவி'யே அதிகம் பயன்படுத்தப்படுகிறது.

ஒலி ஒப்புமையோடு தமிழ்ச்சொல் வேண்டும் என்றால், 'திறவி' அல்லது 'திறப்பி' அல்லது 'கீளி' என்னும் சொல்லைப் பயன்படுத்தலாம்.

ஒப்பு நோக்க:
திற – திறப்பு –திறப்பி.
திருப்பு – திருப்பி, தோசை திருப்பி.
திற – திறவி.
மற – மறவி, 'நெடுநீர், மறவி,.. குறள்.

கிழி – கீள் – கீண்டல். (cleave, cleft, cleavage.)

கிழி – கிளி – கிளிஞ்சல் – கிளிஞ்சி clam, இரண்டாகத் திறக்கக் கூடியது, Bivalve.

கீள் – இரண்டாகக் கூறிடல்,
"தோளினா லெஃக மேந்தித்
தும்பிமே லிவரக் கையா
னீளமாப் புடைப்பப் பொங்கி
நிலத்தவன் கவிழ்ந்து வீழக்
கீளிரண் டாகக் குத்தி
யெடுத்திடக் கிளர்பொன் மார்பன்
வாளினாற் றிருகி வீசி
மருப்பின்மேற் றுஞ்சி னானே."
(சீவகசிந்தாமணி: 2248).

"தாது உகு நறு மென் சாந்தம்
குங்குமம் குலிகம் தண் தேன்
போது உகு பொலன் தாது என்று இத்
தொடக்கத்த யாவும் பூசி
மீது உறு சுனை நீர் ஆடி
அருவி போய் உலகின் வீழ்வ
ஓதிய குன்றம் கீண்டுக்
குருதி நீர் சொரிவது ஒத்த"
(கம்பராமாயணம்,சுந்தரகாண்டம்: 9).
குன்றம் கீண்டு = குன்றம் (பிளந்து), திறந்து.

"கிள் – கிழி. கிழித்தல் = 1. கீறுதல். 2. பீறுதல். "தரியினங்கடம் எயிற்றினாற் சிதையக் கிழித்த பேரிறால்" (கந்தபு. ஆற்று. 23). 3. பிளத்தல், . "நெடுங்கிரி கிழித்து" (கம்பரா. நிகும். 88). 4. முறித்தல். 5. கண்டித்தல். 'சிலவசனங்கள் சொல்லிக் கிழிப்பதும்" (கவிகுஞ். 2). 6. திறத்தல். "வாயுழுவை கிழித்தது" (திருக்கோ. 72). 7. தோற் கடித்தல். 8. கோடு கீறுதல். 9. அழித்தல். ம. கிழி. நு. cleare, OE. cleof, OS., OHG. kliop, ON. மடதரக."
(பாவாணர், வேர்ச்சொற் கட்டுரைகள்: 73 – 74).

"ஆவா இருவர் அறியா அடிதில்லை அம்பலத்து
மூவா யிரவர் வணங்கநின் றோனையுன் னாரின் முன்னித்
தீவாய் உழுவை கிழித்த(து)அந் தோசிறி தேபிழைப்பித்(து)
ஆவா மணிவேல் பணிகொண்ட வாறின்றோர்
ஆண்டகையே."

(திருக்கோவையார்: 72).
கிழித்தது = திறந்தது.

கீள் – கீறு (கீற்று) – கீறித் திற – கீறல்.

கிழி = பிள = இரண்டாகத் திறத்தல்!

கதவுகளின் தாழ் திறத்தல்!

கிழி, காளி > Key (மூலம் தெரியவில்லை எனப்படுகிறது).

key (n.1)

"instrument for opening locks," Middle English keie, from Old English cæg "metal piece that works a lock, key" literal and figurative ("solution, explanation, one who or that which opens the way or explains"), a word of unknown origin, abnormal evolution, and no sure cognates other than Old Frisian kei.

Perhaps it is related to Middle Low German keie "lance, spear" on notion of "tool to cleave with," from Proto-Germanic *ki- "to cleave, split" (cognates: German Keil "wedge," Gothic us-kijans "come forth," said of seed sprouts, keinan "to germinate"). But Liberman writes, "The original meaning of *kaig-jo- was presumably 'pin with a twisted end.' Words with the root *kai- followed by a consonant meaning 'crooked, bent; twisted' are common only in the North Germanic languages." Compare also Sanskrit kuncika- "key," from kunc- "make crooked."

நன்றி: அரிமாப்பாமகன் ஆ. (புலனப்பதிவு)